# கவிதை மணிமாலை

(திருக்குறள் விளக்கம்)

முதற் பாகம்

**வித்துவான் இ. குற்றாலம் பிள்ளை**
("கவிமணி இல்லம்" புத்தேரி, நாகர்கோவில்.)
தமிழாசிரியர்,
சென்டிரல் உயர்நிலைப்பள்ளி, திருவனந்தபுரம்.

வெளியிடுவோர்:

**கவிமணி இல்லத்தார்**

**புத்தேரி, நாகர்கோவில்.**

# வாழ்த்துரை

ஆஸ்தான கவிஞர்
வெ. இராமலிங்கம் பிள்ளை M. L. C. நாமக்கல்.

திரு. குற்றாலம் பிள்ளையவர்கள் இயற்றியுள்ள 'கவிதை மணிமாலை' என்னும் திருக்குறள் விளக்க நூலைப் படித்து மகிழ்ந்தேன்.

எந்நாட்டவர்க்கும் எக்காலத்துக்கும் வற்றாத ஞானக் களஞ்சியமாக விளங்கும் பொய்யாமொழியாம் திருக்குறளை எப்படி யெப்படியாக விளக்கினாலும் தகும். திரு குற்றாலம் பிள்ளையவர்கள் மிகவும் புது முறையில் இயற்றியுள்ள இந்த விளக்கம் பாராட்டத்தக்கது. அவரை மனமார நான் வாழ்த்தி இறைவனை வணங்குகின்றேன்.

# வாழ்த்துரை

## கவிஞர், **அழ. வள்ளியப்பா**, சென்னை.

வழுக்கள் போக்க வந்தோன்—நல்ல
வாழ்வை ஆக்க வந்தோன்
ஒழுக்கம் காட்ட வந்தோன்—தமிழுக்கு
உயிரை ஊட்ட வந்தோன்.

என வான்புகழ் கொண்ட வள்ளுவரைத் தெள்ளத் தெளிந்த செந்தமிழில் உள்ளம் மகிழ்ந்து பாடியுள்ளார் கவிமணி அவர்கள். வாழ்க்கைக்கு வழி காட்டும் ஒளி விளக்காய் ஒப்பற்ற பெரு நிதியாய்த் துலங்கும் திருக்குறளுக்குப் பலர் உரை செய்தனர். சிலர் விளக்கக் கதைகள் எழுதினர். ஒரு சிலர் குறட்பாக்களை வெண்பாக்களாக விரித்துப் பாடினர். ஒருவர் ஒன்றேமுக்கால் அடியிலுள்ள குறளை ஒரே அடியில் சுருக்கித் தந்துள்ளார்! வேறு ஒருவர் முதற் குறளை மட்டும் எடுத்துக்கொண்டு அதற்கு 200 பக்கங்களில் விளக்கம் கூறியுள்ளார்! இப்படி, தமிழில் குறள் பற்றிய நூல்கள் இதுவரை இருநூற்றுக்கு மேல் வெளிவந்துள்ளன என்பதை அறியும்போது, குறளின்பால் அறிஞர்கள் கொண்டுள்ள அளப்பரிய ஈடுபாட்டையும் தமிழ் மக்களின் பேரார்வத்தையும் நம்மால் நன்குணரமுடிகிறது.

திருக்குறளில் பெரிதும் ஈடுபாடுடைய வித்துவான் குற்றாலம் பிள்ளையவர்கள் "கவிதை மணிமாலை" எனும் இந்நூலில் பாயிரம், இல்லறவியல் இரண்டிலும் காணப்படும் 240 குறட்பாக்களையும் கவிதையில் விளக்கிக் கூறியுள்ளார். ஒவ்வொரு குறளிலும் போதிந்துள்ள உயர்ந்த கருத்தை எளிய நடையில், சிறுவரும் உணரும் வகையில் தெளிவாக எடுத்துக் கூறியுள்ளார்.

'இனியவை கூறல்' அதிகாரத்தின் இறுதிப் பாடலை விளக்கிப் பாடும் இக்கவிஞர்,

"நற்சொல் இருந்தும் வன்சொற்கள்
நவிலும் மடமை ஏனய்யா?
கற்கண் டன்ன கனியிருக்க
காயை விரும்பி உண்பீரோ?

என்று கேட்கின்றார். கவிமணியவர்களின் வழிபற்றிக் கவியியற்றும் தன்மையை இவரது கவிதைகளில் கண்டுகளிக்கின்றோம்.

திருவள்ளுவரிடம் சிறந்த பற்றும், கவிமணியவர்களிடம் கனிந்த பக்தியும் கொண்டுள்ள இக் கவிஞர் மேன்மேலும் கவிதை பல புனைந்து, கலை, மொழி, நாடு கவின் பெற்றோங்கப் பணி புரிவார் என நம்புகின்றேன்.

'கவிதை மணிமாலை' வாழ்க!
கவிஞர் குற்றாலம் பிள்ளையவர்கள் வாழ்க!

# மதிப்புரை

டாக்டர் **V. I. சுப்பிரமணியம்** M. A; Ph. D.
(தமிழ்த்துறைத் தலைவர், கேரளப் பல்கலைக் கழகம்)

*பல ஆண்டுகளாகப் பூத்துக் குலுங்கிய முல்லைக் கொடியொன்று வயது முதிர்வால் வாடிப் பட்டுப் போயிற்று. அதன் மூட்டில் மற்றொரு முல்லைக்கொடி விரைவில் தளைத்து பூக்கவும் தொடங்கினால் அதன் சொந்தக்காரர் எவ்வளவு மகிழ்வார்! அவரைப் போன்றே 'கவிதை மணிமாலை'யைக் கண்ட நாம் மகிழ்வெய்துகிறோம்.*

*இதன் ஆசிரியர் திரு குற்றாலம்பிள்ளை காலஞ் சென்ற கவிமணியின் பெயரன். அவர் ஆதரவில் வளர்ந்தவர். கவிதையில் அவர் போக்கைப் பெரிதும் பின் பற்றுபவர்; இளைஞர்; ஊக்கமுடையவர். இன்று அவர் அளித்துள்ள 'கவிதை மணிமாலை' அவரது கன்னிப்பூ.*

*இந்நூலில் பெரும் பகுதியும் திருக்குறளின் விளக்கங்களாகும். இல்லறவியலில் உள்ள ஒவ்வொரு குறளின் கருத்தையும் நன்கு புரிந்துகொண்டு எளிய வெண்செந்துறைப் பாக்களில் இவ்வாசிரியர் செய்திருக்கிறார்.*

*"குழலினிது யாழினிது என்பதம் மக்கள்
மழலைச் சொல் கேளா தவர்"*
*என்பது திருக்குறள்.*

*"குழலும் யாழும் இனிதென்று
கூறும் மக்கள் தாம்பெற்ற
மழலை நாவின் இனியமொழி
மாண்பின் திறனை அறியாதார்."*

என்பது கவிதை மணிமாலை; இப்பாடலில் தெளி விருக்கிறது. எளிமையும் சொல்லியையும் இருக்கின் றன. நான்கு வரிகளும் கட்டுக்கோப்புடன் விளங்கு கின்றன. கேட்கும்போது ஓர் இனிமை பிறக்கின்றது. இவர் கவிதைத் திறனுக்கு இது ஓர் சிறந்த எடுத்துக் காட்டு.

சில இடங்களில் இவ்வாசிரியர் திருக்குறட் பாக் களுக்குச் சற்று விலகியே விளக்கம் கூறியிருக்கிறார்.

"வந்தார்க் கீந்து வருவோரை
வாயில் நின்று எதிர்நோக்கும்
செந்தூர் முருகன் சேவடியான்
செல்லும் இடத்துச் சீர்பெறுவான்"

என்ற பாவில் செந்தூர் முருகன் மீது ஆசிரியர் கொண்டுள்ள ஈடுபாட்டையும் குறிக்கிறார். திருக்குறட் கருத்தைத் தனக்கேற்ற முறையில் பாடுவதே இவர் நோக்கம். எனவே தன் கவிதையில் தனது இஷ்ட தெய்வத்தைத் தன்னையும் மீறந்து துதிக்கிறார். இந்த வரி 'நல்விருந்து வானத்தவர்க்கு' என்ற அடியை நன்கு விளக்குகிறது.
இதைப்போல்,

"அண்டை வாழ்வான் மனையாள்மேல்
ஆசை யுற்று அவன்வாயில்
மண்டை சொறிந்து நிற்பானின்
மடையர் உலகில் வேறுளரோ"

என்ற பாவில் 'மண்டை சொறிந்து' என்ற நாஞ்சிநாட் டுத் தொடர் பிறனில் விழைவானின் மடமையை நன்கு சித்தரிக்கிறது.

இறுதியில் உள்ள 'வீரத்தாய்' புறநானூற்றுப் பாவை அடியொற்றி மிக இனிமையாக நடக்கின்றது.

திரு குற்றாலம் பிள்ளையின் புலமையுள்ளம் முதிர்ந்து மலர்ந்து பரிமளிக்க வாழ்த்துகிறேன்.

# சாற்றுக் கவி

வித்துவான் **R.** வீரபத்திரன் M. A; L. T.
(தமிழ் விரிவுரையாளர், திருவனந்தபுரம்.)

## நேரிசை வெண்பா.

---

வற்ற வழுதூரா
　　வண்டமிழ்மா றுக்கினனும்
**குற்றாலம்** செய்த
　　தலவிளக்கம்—கற்றோர்கள்
தற்றம் பொருத்துத்
　　துணைநாடிப் பெறுவதே
நற்றமிழ்வாழ் வித்த
　　நயம்.

# நன்றியுரை

நற்றமிழ் நனி சிறக்க நாளும் தொண்டு செய்யும் தண்டமிழ்ப் பாவலர்க்கும், நாவலர்க்கும் நல்வணக்கங் கூறி நந்தமிழ்த் தாயின் கந்த மலர்ச் சேவடியில் முதற் காணிக்கையாய் இந்நூலைச் சூட்டுகின்றேன்.

இப்பணியை யான் செப்பமுறச் செய்தற்குத் துணைநின்ற தூயவர்கள் அனைவருக்கும் என்றென்றும் நன்றியுடையேன். சிறப்பாக, இச்சிறிய நூலிற்கு சிறப்புப்பாயிரம் செய்தருளிய செந்தமிழ்ப் பெரியார், என் உரிமைத் தந்தையார், எனக்குத் தமிழறிவித்த ஆசிரியப் பெருந்தகையார் உயர்பெருந்திரு **பண்டித சாத்தாங்குட்டிப்பிள்ளையவர்கள்.** அவர்கள் நெல்லையாம் தென்கொம்புதூரினின்றும் பரப்பிவரும் செந்தமிழ்த்தென்றலைச் சில காற் பருகியதன் விளைவே இந்நூல். அவர்கள் திருவடியை எந்நாளும் என் சிந்தையில் வைத்துச் சேவிப்பதன்றி வேறு கடப்பாடு யாது செய்யவல்லேன்.

நூலை முற்றும் பார்வையிட்டு மதிப்புரை தந்தார்கள் பேராசிரியர் **Dr. V. I. சுப்பிரமணியம் M. A; Ph. D.** அவர்கள். அன்னாரின் பாராட்டு என்னறிவைப் பொறுத்தமட்டில் அளவிலதிகமாயினும், என்மேல் அவர்களுக்கு இருக்கும் வாஞ்சையையும், கவிதையைச் சுவைத்து, கவின்பெறு தமிழை வளர்ப்பதிலுள்ள அவர்களது உளப்பாங்கையும் எடுத்துக் காட்டுவதாகும். அவர்களுக்கு என்றும் கடமைப்பட்டுள்ளேன்.

சென்னை மாநில ஆத்தானக் கவிஞர், நாமக்கல் உயர்திரு **வெ. இராமலிங்கம் பிள்ளையவர்கள்** தமது தள்ளாத வயதிலும் தமிழ்மீது கொண்ட அயராப்

பற்றுதலால் என் சிறு நூலைப் பார்த்துப் பாராட்டி வாழ்த்தியருளியுள்ளார்கள். திருக்குறளாம் தெய்வத் திருமறைக்குப் புத்துரை கண்ட அப்புண்ணியரின் பொன்னடிக்கு என்றும் என் வணக்கங்கள்.

குழந்தைக் கவிஞர், குழந்தை எழுத்தாளர் சங்கத் தலைவர், புதுமையில் இனிமை சொட்ட கவிபாடும் பெருந்தகையாளர் **திரு அழ. வள்ளியப்பா** அவர்கள் தமிழ்த்தொண்டு பலவற்றிற்குமிடையே இந்நூலைப் பார்வையிட்டு வாழ்த்து அளித்துள்ளார்கள். கவிஞர் அவர்களை சிரந் தாழ்த்தி வணங்குகின்றேன்.

கேரளப் பல்கலைக் கழகக் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் வித்துவான், உயர்திரு **ஆர். வீரபத்திரன் M. A. L. T.** அவர்கள் நூலை முற்றும் பார்வையிட்டு அளித்த அன்புப் பாடல் என்னை எழுத்துலகிற் பெருமை பெறச் செய்யும் வாய்மைச் சொற்களால் அமைந்தது. அவர்களது கருத்தையே தமிழறிஞர் மரபு முன் வைத்து, என்னை நல்லருள் செய்து ஏற்றுக் கொள்ள வேண்டுகின்றேன். அவர்களுக்கு என் பணிவான வணக்கங்கள்.

இந்நூலை அச்சியற்றும் காலத்து, படிகளைப் பார்வையிட்டும், பல்லாற்றானும் துணைநின்ற என்னரிய நண்பர் திருவனந்தை சென்டிரல் உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியர் வித்துவான் **திரு எஸ். எம். ஸ்டீபன் B. A.** அவர்களுக்கும், என் அன்புமிகு நண்பர் வித்துவான் **திரு கே. சிவராம பிள்ளை** அவர்களுக்கும் என் அன்பு வணக்கங்கள். அத்துடன் குறுகிய காலத்தில் சிறந்த முறையில் அச்சிட்டுக் கொடுத்த **வடசேரி இராசன் அச்சகத்தாருக்கும்,** அச்சக மேற்பார்வையாளரும் என் அன்புக்குப் பாத்திரமானவருமான **திரு வே. ப. பெருமாள்** அவர்களுக்கும் என் நன்றியுரியதாகும்.

இந்நூலை வெளியிடுபவர்கள் என் தாய் மாமனுர் உயர்திரு **கு. குமாரசுவாமிப் பிள்ளை** அவர்கள். அவர்களே என் வாழ்வின் பெருமைக்கும் வளர்ச்சிக்கும் துணை நிற்பவர்கள். எல்லா வகையானும் அவர்களுக்குத் தொண்டுசெய்யக் கடமைப்பட்டுள்ளேன்.

தமிழ்ப் பெருங்குடி மக்களே! அடியேனின் இப் பணியைக் கண்ணுறுங்கால் எப்பகுதியில் சிறப்பை காண்பீர்களோ அது என் ஆசிரியர் உயர்திரு பண்டித தா. சாத்தாங்குட்டிப்பிள்ளையவர்கள் அளித்த கல்வியின் பயனென்றும், கவிமணி இல்லத்தில் பிறந்து, வளர்ந்த பெருமை என்றும் கருதுக. குறை காணின் இருபத்தைந்து ஆண்டுகளே நிரம்பிய இளைஞனின் அனுபவக் குறை என மன்னிக்க.

வணக்கம்.

கவிமணி இல்லம்,
புத்தேரி.

அன்பன்
**இ. குற்றாலம்.**

திருச்சிற்றம்பலம்

# சிறப்புப்பாயிரம்.

பனிக்கட லுடுத்த பார்மக ளாகம்
நனிசிறந் தொளிரும் நன்கல நாப்பண்
பதித்தநன் மணியின் பல்கதிர் விரித்து
கதித்தெழு மிருளை களைந்தொளி வீசும்
பைந்தமிழ் மொழியில் பகருமென் னூலினும்
வந்தனைக் குரிய வள்ளுவன் யாத்த
ஐவகை இலக்கணத் தமைதி நிறைந்த
பொய்யா மொழியெனும் புண்ணிய நூலின்
மெய்யாம் பொருளை மெலியரும் உணர
இனிய எளிய நடையில் 'இசைப்பா
கனியுங் கண்டுங் கசப்பக் **கவிதை
மணிமாலை**யென்னும் பெயரில் வகுத்தனன்
அணியென நாட்டுக் கமைந்தரும் பொருள்தரும்
வான்முக டுரிஞ்சும் மலையிடைக் கொண்மூ
தான்பொழிந் திடுநீர் தண்டலை யுயர்தருக்
கோட்டுறு பூந்துணர் குலவிய தேனொடும்
வாட்டமில் கதலி வருக்கை தேமா
உட்கனிந் தொழுகும் உயர்கனிச் சாற்றோடு
பெட்புறச் சேர்ந்து பெருகியொன் றாகி
பழையா றென்னும் பஃறுளி யாற்றில்
விழையப் புகுந்து மென்மெல ஓடி
பாய்ந்து பரந்து பயன்தரு கழனித்
தோய்ந்த செந்நெல் தோமற விளைக்கும்

நாஞ்சில் நாடெனும் நன்னா டதனில்
வாஞ்சையாய் உத்தமர் வாழ்**புத் தேரிப்**
பதிவரு நல்லோன் பண்புடை யாளன்
இதமுற யார்க்கும் இனியவே புரிவோன்
முந்தும் அன்பால் மொழிசேர் அருளால்
நந்தா விளக்காய் நாட்டோர் புகழ
வந்தவ தரித்த வர**கவி மணி**யென
காரணப் பெயர்கொள் கருணை யாளன்
பேரணி கொள்ளும் பெட்பில் வளர்ந்தோன்
ஐயைந் தாண்டும் அகலா இளையோன்
எய்யா நலஞ்சார் என்னரும் புதல்வன்
உன்னு மிலக்கணம் இலக்கியம் பலவும்
முன்னம் என்பால் முறையாக் கற்றோன்
பின்னர்தன் உழைப்பால் புலவர் பட்டம்
பெற்றோன் கவிசெய் பேரவா வுடையோன்
**குற்றால** மென்னும் குரிசில் தானே.

தென்கொம்புதூர்,
27—12—'59.

**தா. சாஸ்தாங்குட்டிப்பிள்ளை.**

# நினைவு வெளியீடு



காலஞ்சென்ற
உயர்திரு **கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை**
அவர்கள் மனைவியும்,
இந் நூலாசிரியரின் பாட்டியும்,
எனது மாமியுமான,
அண்மையில் காலஞ்சென்ற
திருவாட்டி **உமையம்மையாரின்**
நினைவாக இந்நூலை வெளியிடுகிறோம்.

**சு. குமாரசுவாமி,**
**"கவிமணி இல்லம்"**
**புத்தேரி.**

## இறை வணக்கம்.

(நேரிசை வெண்பா)

வள்ளி மணவாளா!
வள்ளால் திருக்குமரா!
உள்ளம் உருகுதையா
உன்னினைவில்—எள்ளாதே
பாடா தொழியேன்
பரம்பொருளே எக்குறையும்
நாடா தருள்செய்வாய்
நன்று. 1

அன்பால் உனையடைந்தேன்
அண்ணல் கரிமுகத்தோய்!
என்பால் அருளீந்து
ஏற்றிடுவாய்—உன்பாலே
என்றும் புகழ்பாடி
ஏற்றமுடன் யான்வாழ
நன்றுன் தமிழெனக்கு
நல்கு. 2

கண்ணன் கரியன்
கருதுதிரு நற்றுணைவன்
வெண்ணைப் பிரியனும்
வேங்தே நீ—மண்ணில்

திருவோடு தீந்தமிழும்
　　தீதறவே ஈய
உருவோடு வாராய்
　　உவந்து. 3

நற்றமிழாம் ஆவின்பால்
　　நல்வெண்பாச் சர்க்கரையில்
தெற்றறவே சேர்த்துநிதம்
　　சேவிப்பேன்,—குற்றமறக்
கண்ணே! கருவண்ணே!
　　காதலுறு செந்தமிழை
எண்ணே டெழுத்தெனக்கு
　　ஈ. 4

செந்தமிழைத் தந்த
　　சிவனே! சிதம்பரத்தில்
விந்தையாய் ஆடுமென்
　　வேந்தனே!—நொந்துநிற்கும்
எந்தன் உளங்குளிர
　　எண்ணரிய உன்னளியைச்
சந்தமுடன் தாராயோ
　　சற்று. 5

## தமிழ்த்தாய் வணக்கம்.

(நேரிசை வெண்பா)

அன்னை கலையரசி
ஆரும் புகழரசி
என்னை அருளீந்து
ஏற்றிடுவாய்; —உன்னையான்
உள்ளப் பொலிவோடு
ஓதித் தொழுகின்றேன்
தெள்ளு தமிழால்
தெளிந்து. 1

(இன்னிசை வெண்பா)

கம்பர் கவியமுதும்
காணும் சிலம்பமுதும்
உம்பர் குறளமுதும்
ஓதும் பெருமறைகள்
உன்னிடம் வாழ்வுறுமால்
உந்தன் புகழ்பாட
என்னிடம் வார்த்தை
இலை. 2

## ஆசிரியர் வணக்கம்.

(நேரிசை வெண்பா)

*எந்தை நீ என்குரு நீ*
*என்றுன் திருவடியிற்*
*சிந்தை தனைவைத்துச்*
*சேவிப்பேன்; —சந்ததமும்*
*எண்ணில் எழுத்தில்*
*இசையோடு வாழ்வுனை*
*நண்ணினேன் நல்லாசி*
*நல்கு.*

(தமிழ்ப் பெரியார் பண்டித நா. சாத்தாங்குட்டிப் பிள்ளை அவர்களை வணங்கி அவர்கள்பால் யான் கல்வி பயலுங்கால் பாடிய பாடலே இது)

## அவையடக்கம்.

(நேரிசை வெண்பா)

கண்ணன் கழல்பாடி
கன்னித் தமிழ்பாடி
வண்ணச் சிறுநூல்
வரைகின்றேன்; —எண்ணம்போல்
எல்லாம் இனிதிலங்கி
ஏற்றம் யான் உற்றிடவே
வல்லான் அருளும்
வரம். 1

வள்ளுவமாம் நன்னூலை
வாஞ்சையுடன் கற்றேநான்
தெள்ளுநடைப் பாவாய்
தெளிகின்றேன்; —வள்ளலே!
தெய்வப் புலவோனே!
தீந்தமிழ் நான்முகனே!
பெய்திடுவாய் எந்தனுக்கப்
பேறு. 2

கண்ணியெனும் நல்லினத்தைக்
காட்டிப் புகழ்பெற்ற
புண்ணியரின் பொன்னடியைப்
போற்றுகின்றேன்; —மண்ணிடையே
கன்னித் தமிழ்மக்கள்
கண்ட புலவோரை
உன்னித் தொழுமென்
உளம். 3

## (நிலைமண்டில ஆசிரியப்பா)

திறமை மிக்க தீதறு புலவோர்
புறநா னூருய் புகன்றன கண்டு
திருவுடைச் செல்வராம் தீந்தமிழ்க் கவிஞர்
பெருமையோ டாக்கிய பெருநூல் பலவும்
மறுவறக் கற்று மாண்புடை யோராய்
உறுபுகழ் யாவும் உற்றயெம் தமிழகப்
பெருங்குடி மக்காள்! பெருங்கட லாம்தமிழ்
திருத்தமாய்க் கற்று திறமெலாங் காணு
அடியேன் கடையேன் அருந்தமிழ்க் கோபுரத்
தடியினை கூட அறிந்தவ னல்லேன்,
கூர்மதி சாத்தாங் குட்டிப் பிள்ளை
சீர்பெறத் தந்த செந்தமி ழறிவால்
ஆக்கிய இந்நூல் அருந்திருக் குறளின்
போக்கினை யொருகால் நின்றுயான் கண்ட
காட்சியை ஒருசார் கவிதையாய்க் கொண்டதாம்;
ஆட்சியும் நன்ருய் அமைந்தது என்பிரேல்
மாட்சியாம் அதுவென் மனமகிழ் கருத்தாம்;
நூற்பயன் ஈண்டு நுவலக் கருதிலேன்
பாற்கடல் போலும் பரந்த அறிவின்
நல்லீர்! நீவிர் நலம்பல தருவீர்
ஆயின் அதுவே அழகாம் என்னை
சேயினைப் போல செந்தமிழ் மீதுளப்
பற்றுதல் ஒன்ருல் பரிவுடன் பார்த்து
உற்ற துணையெலாம் உவந்தளிப் பீரே.

# கவிதை மணிமாலை

(திருக்குறள் விளக்கம்)

## கடவுள் வாழ்த்து.

அகரம் எழுத்தின் முதலாகும்
அன்பே அகத்திற் குயிராகும்
இகமும் பரமும் இன்புறவே
இறையோன் முதல்வன் உலகோர்க்கே. 1

கற்கும் கல்வி பெருமைதர
கடவுள் ஆணை காண்பவரே
பொற்பின் செல்வர் எனவுலகில்
புகழைப் பெற்று வாழ்பவராம். 2

மலரின் மீது வாழ்பவனும்
மாண்பின் இறையோன் திருவடியை
நிலத்திற் பணிந்து தொழுமவரே
நீண்ட புகழைப் பெறுபவராம். 3

ஆசை மிகுதி இல்லாதான்
அன்பில் வெறுப்புக் கொள்ளாதான்
ஈசன் திருத்தாள் பணிவோரை
என்றும் இன்னல் அணுகாதே. 4

இறையோன் புகழை உன்னிடுவோர்
இனிதே நற்றொண் டாற்றிடுவோர்
மறையோர் கூறும் புகழுறுவார்
மாண்பாய் வாழ்வார் துயரிலையே. 5

ஐம்பொறி யடக்கி நின்றானின்
அருளைப் போற்றி ஒழுகிடுவோர்
பைம்பொழில் தருநல் லின்பமெலாம்
பண்பாய் வாழ்வில் பெறுவாரே. 6

ஒப்பில் லாத இறையோனின்
ஒளிர்பே ரடியை அணைந்தோரே
செப்பும் இனிய வாழ்வுறுவார்;
செகத்தில் அவர்க்கு ஈடில்லை. 7

அறக்கட லாய பெம்மானின்
அணியடி தொழுவார் அருள் பெறுவார்;
புறத்திரு வேதும் பயனில்லை;
புண்ணியம் அத்திரு ஈந்திடுமோ? 8

அலகிற் சோதி அடிபணிவார்
அருள்பெற் றிடுவார்; மற்றோர்கள்
புலனறி வில்லாப் பொறிபோல்வார்;
புகழுறும் வாழ்வும் இல்லாதார். 9

எத்தனை செல்வம் இருந்தாலும்
இறையோன் அடியை எண்ணாதார்
இத்தரை இன்பம் பெறுவாரோ?
இம்மைப் பயனும் அவர்க்குண்டோ? 10

# வான்சிறப்பு

*வானம் பொழியும் மழையில்லையேல்*
*வையம் வறண்டு மாய்வதனால்*
*வானம் வழங்கும் மழை நீரே*
*வையத் தோர்க்கு அமுதாகும்.* 1

*மக்கட் குணவை ஆக்கிடவும்*
*மாண்போ டவ்வுண உண்டிடவும்*
*பக்கத் துணையாய் நிற்பதுவும்*
*பாரிற் பொழியும் மாமழையே.* 2

*விண்ணில் நின்றும் பொழியாது*
*வீணே மழையும் நின்றிடுமால்*
*மண்ணில் மாந்தர் பசியாலே*
*மாய்தல் திண்ணம் ஐயமில்லை.* 3

*இத்தரை மீதே உழவரெலாம்*
*ஏர்த்தொழில் புரிதல் மழையாலே;*
*அத்தகு மாமழை தான்மறுக்கும்*
*ஆயின் அவர்வளம் குன்றிடுமே.* 4

*வறுமைத் துயரை ஆக்கிடவும்*
*வாட்டம் நீக்கிக் காத்திடவும்*
*திறமை பெற்று புவிமீது*
*திகழும் ஆற்றல் மழைக்கன்றே!* 5

விசும்பும் கசிந்து உருகாதேல்
    வெம்மை உலகில் நீங்கிடுமோ?
பசும்புல் ஓங்கி வளர்ந்திடுமோ?
    பைங்கூழ் கொள்ள வகையுண்டோ? 6

வானும் வழங்கா தாகிவிடின்
    வளந்தான் கடலால் பெறலாமோ?
மீனும் முத்தும் நீர்வளமும்
    மிகையாய்ப் பெறுதல் இயன்றிடுமோ? 7

பெருமை செய்யும் வானந்தான்
    பெய்யா தொழியும் காலையிலே
வருவோர் தம்மை நன்றாற்றும்
    வண்மை தானும் மாய்ந்திடுமால். 8

வானம் வழங்கும் நிலையிலையேல்
    வந்தார் தம்மை வரவேற்று
தானம் செய்ய வியன்றிடுமோ?
    தவமும் இயற்ற நெறியுளதோ? 9

நீரிலை யாயின் வாழ்வோர்கள்
    நிலத்தில் இல்லை; அந்நீரை
சீருற உலகிற் கீந்திடுநற்
    சீர்மை வானிற் குளதன்றோ! 10

## நீத்தார் பெருமை

நல்லன நாடி இல்வாழ்வை
நன்றே துறந்த நல்லோரை
வெல்லும் பெருமை வேறுளதோ?
விருப்பாய் நூற்கள் போற்றிடுமே. 1

துறந்தார் பெருமை தனையெல்லாம்
தொகையுள் ளடக்க வியன்றிடுமோ?
இறந்தார் எண்ணம் அறிவோர்கள்
ஈண்டு உளரேல் இயன்றிடுமே. 2

இம்மை மறுமைத் திறமெல்லாம்
இனிதே தெரிந்து துறந்தாரின்
செம்மை நெறியை உலகோர்கள்
சிகரம் என்றே போற்றுவரே. 3

அறிவாம் படையைக் கையேந்தி
ஐந்து பொறியும் வென்றிடுவான்
துறவாம் நிலத்திற் புகுவானேல்
தூவும் நல்வித் தாவானே. 4

இம்மண் மீது துறந்தார்க்கு
இமையோர் தலைவன் ஈடாமோ?
செம்மை கொண்ட நெறியோரின்
சிறப்பைக் கூறச் சொல்லுண்டோ? 5

செய்ய அருமை யானவற்றைச்
செய்வோர் பெரியா ராவாரே;
செய்ய முயலா திருப்போரைச்
சிறியோர் என்று சொலலாமே 6

புலனறி வாற்றல் உடையாரின்
பொன்னடி பணியும் பேருலகு;
நலனறி வார்கள் அவர்புகழை
நன்றே வாழ்த்தி வணங்குவரே. 7

உண்மை நிறைந்த மொழியுடையார்
உலகோர் போற்றும் திருவுடையார்;
தண்மை செய்யும் அவர்மொழியைத்
தரணி வாழ்வோர் போற்றுவரே. 8

குணத்தாற் சிறந்த பெரியோரின்
கோபம் தணிக்குந் தன்மையதோ?
பணத்தாற் பணித்தல் இயன்றிடுமோ?
பாரில் வேறும் படையுளதோ? 9

செவ்வை நெறியில் என்ஞான்றும்
சேவை புரியும் நல்லோரை
எவ்வெவ் வறமும் அணைந்திடுமே;
இறையாய்ப் போற்றப் படுவாரே. 10

## அறன் வலியுறுத்தல்

நற்புகழ் நாட்டி வாழ்பவரும்
நன்றே செல்வம் பெறுபவரும்
பொற்புடன் அறங்கள் புரிபவராம்;
புவியில் மற்றோர் அடையாரே. 1

அறத்தைச் செய்வோர் இவ்வுலகில்
ஆக்கம் அனைத்தும் பெற்றிடுவார்;
மறந்தா ராயின் புகழெல்லாம்
மாளக் கண்டு துன்புறுவார். 2

எவ்வழி அறங்கள் சென்றிடுமோ
எத்துணை செய்ய இயன்றிடுமோ
அவ்வழி அனைத்தும் ஆற்றிடுவோர்
அருளும் திருவும் பெறுவாரே. 3

கள்ளம் இல்லா உள்ளமுடன்
காட்சி தருதல் நல்லறமாம்;
எள்ளற் கரிய வாழ்வுறுவோர்
ஏதம் அற்று வாழ்பவராம். 4

கெட்ட குணமும் கெடுமதியும்
கிட்டாப் பொருளில் நல்விருப்பும்
துட்ட சொல்லும் விட்டாலே
தோன்றும் அறமே ஈதுண்மை. 5

வாழ்நாள் மிகையாய் உளதென்று
வாளா இருத்தல் நன்றன்று;
வீழ்நாள் அறியோம் புகழீயும்
வித்தாம் அறங்கள் செய்திடுக. 6

நேசம் கொண்டு அறம்புரிவோர்
நேடும் பெருமை அனைத்துக்கும்
ஏசு புத்தர் காந்திமுனி
இம்முப் பெரியார் புகழ்சான்றும். 7

நீக்கம் இன்றி எந்நாளும்
நிலையாய் அறங்கள் புரிவோரை
ஆக்கம் என்றும் நீங்காதே;
அல்லல் வாழ்வை அடையாரே. 8

மகிழ்ச்சி என்னும் மாண்புநிலை
மண்ணிற் பெறுவோர் அறம்புரிவோர்;
இகழ்ச்சி யன்றி வேறேதும்
இன்னோ ரல்லார் பெறுவாரோ? 9

அறமே செய்தற் குரியதுவாம்;
அதுவே இன்பந் தருவதுவாம்;
மறமே ஒழித்தற் குரியதுவாம்;
மகிமை பெறுவார் ஈதறிவார். 10

# இல்வாழ்க்கை.

இல்லற வாழ்வை ஏற்பவரே
என்றும் அறிவு முதிர்ச்சியினால்
நல்லற மாற்றும் மூவர்நிலை
நன்றே காத்து வருபவராம் 1

இல்லற வாழ்வைத் துறந்தாரை
இரந்தே வாழ்க்கை புரிவாரை
நல்லுயிர் நீத்தார் கடமையொடு
நன்றே போற்றல் இல்லறமாம். 2

தன்னைப் பேணி இறைபேணி
தன்னைச் சார்ந்தார் தனைப்பேணி
முன்னோர் பேணி விருந்தோம்பி
முயலும் வாழ்வே இல்வாழ்வாம். 3

பாவம் அஞ்சிப் பழியஞ்சி
பண்பாய் ஈட்டும் பொருளாலே
மேவும் நல்வாழ் வுடையாரின்
மேன்மை நெறியே நன்னெறியாம். 4

இல்லாள் மீது அன்போடு
இரப்பார்க் கீந்து அறங்காத்து
வல்லான் பாதம் பணிவோரின்
வாழ்க்கை சிறப்பாய் வளர்ந்திடுமே. 5

மனையில் வாழ்ந்து அறம்புரிவோர்
மாட்சி யடைவார்; அஃதின்றி
வினைகள் துறந்தே புரிந்துபெறும்
வெற்றி வாழ்க்கை யாதுளதோ? 6

ஏற்ற நெறியில் இல்வாழ்வான்
ஏதம் இன்றி மற்றோர்க்கு
ஆற்றும் பண்பால் உயர்வுறுவான்
ஆக்கம் என்றும் அகலாதே. 7

ஆற்றுந் தவத்திற் கேற்றதுணை
அணியாய்ப் புரிந்து இல்லறமும்
ஆற்றும் நெறியே பெருநெறியாம்;
அதுவே பெருமை தருநெறியாம். 8

அறமாம் இரண்டுள் இல்லறமே
அறிஞர் கூறும் நல்லறமாம்;
இறவாப் புகழைப் பெற்றிடலாம்
இகழா நிலையை அதுபெறுமேல். 9

வாழும் வகையைத் தெரிந்தேஇல்
வாழ்வைப் புவியிற் பெறுவோர்வான்
வாழும் தேவர்க் கொப்பாவார்
வையம் வாழ்த்த வாழ்ந்திடுவார். 10

## வாழ்க்கைத் துணைநலம்

மனையைக் காக்கும் மாண்போடு
மணந்தான் வருவாய் அறிந்தேநல்
வினைகள் இயற்றும் நல்லாளே
விளங்கும் வாழ்க்கைத் துணையாவாள். 1

பெண்கட் குரிய திறமெல்லாம்
பேணாள் இல்லச் செல்வமெலாம்
கண்கள் இல்லான் முன்னேநற்
காட்சி அமைதல் போலாகும். 2

இல்லாள் திறனை உடையாளேல்
இல்லாப் பொருளும் உளதாமோ?
அல்லாள் ஆயின் அவ்வில்லம்
அடையும் இன்பம் ஒன்றுண்டோ? 3

பெண்ணாய்ப் பிறத்தல் பெரும்பயனும்
பெருமை செய்யும் கற்புநெறி
கண்ணாய்ப் பெற்றால் அப்பிறப்பால்
கருதும் புகழும் சொல்லளவோ? 4

கையைப் பற்றி மணஞ்செய்தான்
கடவுள் என்றே கொண்டொழுகும்
தையல் வானை வேண்டுவளேல்
தரணி பொங்க மழைபொழியும். 5

கற்பின் வழியே தனைக்காத்து
கணவர்க் கேற்ற தொண்டாற்றி
நற்பண் பாலே புகழ்பேணி
நாளும் வாழ்வாள் நற்றுணையாள். 6

பெண்மை காக்கச் சிறையமைத்தல்
பித்தே யாகும் வெற்றியிலை
மண்மேல் மங்கை தன்னிறையை
மதித்து நடந்தால் மாண்பாகும். 7

தன்னைக் கொண்டான் நலமெல்லாம்
தகையாய் பேணும் நல்லாளே
பொன்னே போல விண்ணுலகோர்
போற்றும் பெருமை பெறுபவளாம். 8

புகழைக் காத்து மனையறங்கள்
புரியும் இல்லாள் தனைப்பெற்றார்
இகழா நிலையில் வாழ்ந்திடுவார்
இம்மண் என்றும் போற்றிடவே. 9

பங்கம் இல்லாப் பண்பாளன்
பரவும் வாழ்க்கை பூஞ்சோலை;
மங்கை நல்லாள் இளந்தென்றல்;
மக்கள் மலரும் நற்பூக்கள். 10

## புதல்வரைப் பெறுதல்

தக்க செல்வம் ஈதென்று
தகையாய் எண்ணி மகிழ்ச்சியுற
மக்கள் தன்னிற் சிறந்தனவும்
மண்மீ துளவோ? யாமறியோம். 1

மின்னிப் பொலியும் பண்பதனில்
மிக்கார் மக்கள் ஆவாரேல்
பொன்னின் அன்ன புகழென்றும்
புவிமேற் பெறுவர் பெற்றோரே. 2

யாங்கள் பெற்ற செல்வமென
யாண்டும் உரைத்தல் தம்மக்கள்;
தேங்கும் அவர்தம் வினையாலே
தேடும் பொருளே அவர்க்குரித்தாம். 3

அன்பு ததும்ப அருகிருந்து
அளைந்து மக்கள் தருமுணவின்
இன்பம் என்னே! அமுதத்தின்
இனிமை அதற்கு நிகராமோ? 4

சங்கத் தமிழ்போல் செவிக்கமுதம்
சாற்றும் மக்கள் இனியமொழி;
தங்கம் போலும் அவருடலைத்
தழுவின் இன்பம் பெறலாமே. 5

குழலும் யாழும் இனிதென்று
கூறும் மக்கள் தாய்பெற்ற
மழலை நாவின் இனியமொழி
மாண்பின் திறனை அறியாதார். 6

கற்றோர் சூழும் பேரவையில்
கண்ணாய் விளங்க மக்கட்கு
பெற்றோன் கல்விச் செல்வமதை
பெருகச் செய்தல் கடனாகும். 7

சீராய் மக்கள் அறிவனைத்தும்
சேரப் பெற்றால் தந்தையினும்
ஊரார் பெரிதும் போற்றுவரே;
உரிய புகழைச் சூட்டுவரே. 8

மற்றோர் போற்றும் சான்றாண்மை
மகனைச் சேரும் நாளதனில்
பெற்றாள் கொள்ளும் இன்பமவன்
பிறந்த பொழுதின் மிகையன்றோ? 9

இவனைப் பெறுதற் கிவன்தந்தை
எந்நோன் பிருந்தான் எனும்சொல்லை
புவனங் கூற நற்செயலைப்
புரிதல் புதல்வன் கடனாகும். 10

## அன்புடைமை

அன்பர் துயரைக் கண்டதுமே
அடங்கா தொழுகும் கண்ணீரில்
அன்பின் திறனைக் கண்டிடலாம்
அவ்வன் படைக்கும் தாழுண்டோ? 1

அன்பு நெறியை அறியாதார்
அனைத்தும் தமக்கே யாக்கிடுவார்;
இன்பம் பேணும் அன்புடையார்
எல்லா துணையும் பிறர்க்கீவார். 2

வையம் மீதில் மாந்தருடல்
வாழும் உயிரின் திறமெல்லாம்
செய்யும் வினையில் அன்புடைமை
சேரும் நிலையைப் பெறுவதுவாம். 3

அண்டை வாழ்வோர் நல்லுறவு
அன்பின் வழியே தோன்றுவதாம்;
கொண்ட உறவே நட்பென்னும்
கொள்ளற் கரிய சிறப்பீயும். 4

உலகில் இன்பம் காண்பார்கள்
உயர்வாம் அன்பின் நெறியோரே;
விலகல் இல்லாப் பெருமையெலாம்
விளையும் அவர்க்கு எந்நாளும். 5

அறத்தைப் பேணும் மருந்தென்று
அன்பைச் சொல்வார் அறியாதார்;
மறத்தை நீக்கி மாட்சிபெற
மாந்தர்க் கன்பு படையன்றே? 6

என்பில் லாத உயிரினத்தை
எரித்துப் பொசுக்கும் வெயில்போல
அன்பில் லாதான் வாழ்வதனில்
அறமே கூற்ற மாய்வருமே. 7

உள்ளம் அன்பில் ஒன்ருது
உலகில் வாழ்க்கை இன்புறுமோ?
வெள்ளம் அற்ற பாலையிலே
வெந்த மரமும் தழைத்திடுமோ? 8

எண்ணந் தன்னில் நின்ருடும்
ஈடில் அன்பைப் பேணுதார்
கண்ணில் தோன்றும் உறுப்புகளால்
காணும் வாழ்க்கைப் பயனெதுவோ? 9

அன்பே உயிரின் பண்பாகும்;
அவ்வன் பில்லா மாந்தரெலாம்
என்பைத் தோலால் போர்த்திட்ட
இயல்பாம் உடலைப் பெற்றவரே. 10

## விருந்தோம்பல்

வண்ணக் குழலாள் தன்னோடு
வாழும் இல்வாழ் வின்பயனே
நண்ணும் விருந்து நன்றாற்றி
நாளும் இன்பம் பெறுவதுவாம். 1

விருந்து வந்தார் புறமிருக்க
வீட்டைக் காப்போன் தன்னலமாய்
அருந்தும் உணவு அமுதெனினும்
ஆக்கம் உளவோ? அழிவன்றோ? 2

தாழ்வில் லாது எந்நாளும்
தகையாய் விருந்து ஆற்றிடுவான்
வாழ்வில் இன்பம் பெற்றிடுவான்
வறுமை அவனை வாட்டாதே. 3

இனிமை கொண்ட முகத்தினனாய்
என்றும் விருந்து புரிந்தொழுகும்
இனியன் இல்லம் இலக்குமியின்
இன்ப வாழ்வின் இடமாகும். 4

அன்பு வழியே வந்தார்க்கு
அமுதம் அளித்து அவருண்ட
பின்பு உண்பான் நிலமதனின்
பெருமை சொல்ல வேண்டுவதோ! 5

வந்தார்க் கீந்து வருவோரை
வாயில் நின்று எதிர்நோக்கும்
செந்தூர் முருகன் சேவடியான்
செல்லும் இடத்துச் சீர்பெறுவான். 6

விருந்து புரிவான் புகழையெலாம்
விளக்க யாரால் இயலுமையா?
பரந்த மண்மீ தவராற்றும்
பண்பிற் கொப்ப புகழுண்டாம். 7

வீட்டின் கண்ணே விருந்தாற்றும்
வேள்வி தன்னை அறியாதார்
ஈட்டும் பொருளைத் துறந்தாரேல்
இன்னல் உற்று இரங்குவரே. 8

செல்வம் ஒருவர்க் கிருந்தாலும்
செய்யும் விருந்து இலையாயின்
வெல்வ துண்டோ வாழ்வதனில்
வெம்மை பெறுவார் அறிவில்லார். 9

சந்தம் உடைய அனிச்சமலர்
சற்று மோப்ப அழிவதுபோல்
வந்த விருந்தும் அன்பில்லா
வதனங் கண்டால் வாடிடுமே. 10

## இனியவை கூறல்.

உள்ளம் அன்பில் ஒன்ருகி
உண்மை நிறைந்து அறங்காட்டும்
கள்ளம் அற்ருேர் வாய்ச்சொல்லே
கருதற் குரிய இன்சொல்லாம். 1

வஞ்சம் இல்லாச் சொல்லோடு
வதனம் மகிழ்வைக் காட்டிடுமேல்
நெஞ்சம் மகிழ்ந்து அறமாற்றும்
நெறியின் மிக்க பெருமைதரும். 2

இன்பந் தோன்ற முகமலர்ந்து
இனிய சொற்கள் சொல்பவரே
துன்பந் துடைக்கும் அறவழியில்
தோன்றும் முதல்வர் ஆவாரே. 3

இனிய சொல்லை உடையாரை
இன்னல் என்றும் அணுகாதே;
நனிதே வாழ்வார் வறுமையது
நண்ணு வாழ்வைப் பெறுவாரே. 4

பொன்னும் மணியும் பிறவெல்லாம்
புகழைத் தருநல் லணியாமோ?
இன்னல் நீங்கி இனிமையுற
இனிய சொல்லே அணியாகும். 5

நன்மை எண்ணி இன்சொற்கள்
நாளும் கூறும் மாந்தரிடம்
இன்மை நீங்கித் தருமநெறி
இனிதே ஓங்கி வளர்ந்திடுமே 6

குன்றுப் பண்பும் நற்பயனும்
கொண்டார் கூறும் வாய்ச்சொற்கள்
நன்றே உலகில் அவர்வாழ
நன்மை பயக்கும் நெறியாகும். 7

இன்னல் அற்ற நன்சொற்கள்
இற்றைக் கின்பந் தருவதுடன்
மன்னும் இனிய நற்பேற்றை
மாண்போ டொருவர்க் கீந்திடுமே. 8

நன்மை யாவும் இன்சொல்லால்
நாளும் பெருகும் என்றறிவார்
வன்மைச் சொற்கள் சொல்லுவதேன்?
வாழ்வில் ஏதும் பயனுண்டோ? 9

நற்சொல் இருந்தும் வன்சொற்கள்
நவிலும் மடமை ஏனய்யா?
கற்கண் டன்ன கனியிருக்க
காயை விரும்பி உண்பீரோ? 10

# செய்ந் நன்றியறிதல்.

உதவி முன்னர் செய்யார்க்கு
உவந்து உதவி செய்வாரின்
பதவி கூறும் திறமதுவோ?
பாரும் விண்ணும் பரிசாமோ? 1

தக்க தருணம் கண்டொருவன்
தந்த உதவி சிறிதெனினும்
மிக்க புகழை உடைத்தன்றே?
மேதினி யதற்கு ஈடாமோ? 2

வருவாய் நோக்கார் நற்றொண்டின்
வண்மைத் திறனைக் கூறுவமேல்
திருவும் புகழும் பெருங்கடலின்
திகழும் பரப்பின் மிகையன்றே? 3

ஆற்றும் உதவி தினைபோல
அளவிற் சிறிதே யானாலும்
போற்றும் பண்பை அறிவார்முன்
புகழும் பனைபோல் பெற்றிடுமே. 4

பெருமை சிறுமைப் பேதமைகள்
பெய்யும் உதவிக் குண்டோகொல்;
அருமை அறியின் அவ்வுதவி
அடைவார் நிலையின் தகையாகும். 5

குற்றம் அற்றோர் துணையினையும்
குறைவு உற்ற காலத்தே
பற்றுக் கொண்டார் தொண்டினையும்
பரவல் வேண்டும் மறவாதே. 6

துன்பம் வந்த நேரத்தே
துணையாய் நின்று தொண்டாற்றும்
அன்பர் நட்பை எந்நாளும்
அகத்திற் கொள்வார் அறிவுடையார். 7

நல்லார் துணையைத் துறப்பதுவும்
நாட்டும் உதவி மறப்பதுவும்
பொல்லார் செயலை நினைப்பதுவும்
புவியிற் புகழைத் தந்திடுமோ? 8

இன்று செய்யும் தீமையிருள்
எண்ணற் கரிதாய் அமைந்தாலும்
அன்று செய்த ஒருதவி
அதனை அழிக்கும் ஒளியாகும். 9

உலகில் எதனை மறந்தாலும்
உய்யும் வழியைக் கண்டிடலாம்;
நிலையில் நிற்கும் பிறருதவி
நினையா திருந்தால் வாழ்வில்லை. 10

## நடுவுநிலைமை

நட்போ பகையோ எதுவெனினும்
நடுவு நிலையில் தவறாது
திட்பங் கொண்டு வாழ்பவரே
தீதில் வாழ்வைப் பெறுபவராம். 1

தேடும் பொருளால் நன்வாழ்வும்
தேர்ந்த சுற்றத் தின்வாழ்வும்
நாடும் புகழைப் பெறவேண்டின்
நடுவு நிலையே துணையாகும். 2

செல்வம் எண்ணி நடுவுநிலை
சிதையும் வாழ்வைக் கொள்வோர்கள்
வெல்வ துலகில் யாதுமில்லை;
வெறுமை தானே வந்தடையும். 3

பொல்லாச் செயலை உடையோரை
புகழும் நெறியைக் கொள்வோரை
எல்லாம் புவியில் அவர்பெற்ற
இளையோர் ஒழுக்கம் காட்டிடுமே. 4

வளனும் வறுமை நிலையதுவும்
வாழ்க்கை நெறியில் இயல்பாகும்;
வளனை எண்ணி நடுவுநிலை
வழியைத் துறவார் அறிவுடையார்.

நெஞ்சம் எண்ணி நடுவுநிலை
நீங்கா வாழ்வில் நில்லாதார்
அஞ்ச வேண்டும் அழிவுதனை
அதுவே அவர்க்கு அளித்திடுமே. 6

நாடும் நடுவு நிலைமையினால்
நல்லார் செல்வம் அழிந்திடினும்
கேடென் றுலகோர் கருதாரே;
கேண்மை தன்னை மறவாரே. 7

நேர்மை யான துலாக்கோல்போல்
நேராம் வாழ்வை உடையாரே
சீர்மை பெற்ற சான்றோராய்
சிறப்பு யாவும் பெறுவாரே. 8

உள்ளம் கோணு திருப்பதுபோல்
உரைக்குஞ் சொல்லுங் கோணுது
கொள்ளும் நிலையே நடுவுநிலை;
கூறின் அதுவே புகழ்நிலையாம். 9

அயலில் வருவார் பொருளையெலாம்
அவர்தம் உரிமைப் பொருள்போல
செயலிற் கொண்டு விளங்கிடுவார்
செம்மை பெறுநல் வாணிகராம். 10

## அடக்கமுடைமை.

அடக்கம் என்னும் நெறியுடையார்
அமரர் புகழைப் பெற்றிடுவார்;
அடக்கம் இல்லார் துன்பமதை
அணைந்து வருந்தி அழிந்திடுவார். 1

அரிய பொருளாய் அடக்கமதை
ஆக்கிக் காத்தல் வேண்டுவதாம்;
உரிய செல்வம் அதுபோன்று
உண்டோ உலகில் வாழ்வோர்க்கு. 2

அறிவின் திறனே அடக்கமென
அறிந்து ஒழுகும் பண்பாளர்
பிறவிப் பெருமை பெற்றிடுவார்
பெரியோர் எல்லாம் போற்றிடவே. 3

ஒழுக்கம் நிறைந்த வாழ்வோடு
ஒத்த அடக்கம் உடையாரின்
விழுப்பம் சொல்ல மாமலையும்
வேண்டும் உயர்வுக் கொப்பாமோ? 4

பணிவாய் வாழ்தல் நன்மைதனை
பாருள் ளோர்க்கு ஈந்திடுமாம்;
அணியாய் அதனைச் செல்வந்தர்
அடைவா ராயின் புகளென்னே! 5

ஆமை உறுப்பை அடக்குதல்போல்
  ஐந்து பொறியும் அடக்கிடுவார்
தீமை அற்ற வாழ்வுதனை
  தேய மீதிற் பெறுவாரே. 6

எதனைக் காக்க மறந்தாலும்
  இகழும் நாவைக் காத்திடுவீர்!
அதனைக் காக்க மறந்தீரேல்
  அதுவே துன்ப வழியாகும். 7

நன்றே பேசி நின்றாலும்
  நடுவே ஒருசொல் தீதாயின்
அன்றே அனைத்தும் அழிவதனால்
  அன்றோ அடக்கம் வேண்டுவதாம். 8

தீயாற் சுட்ட புண்ணெனினும்
  தேய்ந்து மாய்தல் இயல்பாகும்;
மாயா தென்றும் நெஞ்சத்தில்
  மாறா வடுவாம் தீச்சொற்கள். 9

சினத்தைக் காத்து கல்விதனைச்
  சீராய்க் கற்று ஒழுகிடுவான்
வனப்பைக் காக்க அறமெல்லாம்
  வந்து அணியாய்த் திகழாதோ? 10

## ஒழுக்கமுடைமை.

ஒழுக்கம் அன்றோ உயர்வுதனை
ஒருவர்க் கீயும் நற்றுணையாம்;
இழுக்கம் இன்றி இன்னுயிரின்
ஏற்றம் உடைத்தாம் அதன்காவல். 1

அறங்கள் அனைத்தும் ஆய்ந்தாலும்
அவற்றுள் ஒழுக்கம் உயர்வாகும்;
திறங்கள் யாவும் ஒன்றாக்கி
தேர்ந்த ஒழுக்கம் பேணிடுவோம். 2

பிறப்பால் உயர்வு தாழ்வில்லை;
பிறந்தார் ஒழுக்க வழிநின்றால்
சிறப்பாம்; அன்றி இழுக்கமதைச்
சேர்ந்தார் தாழ்ந்தார் ஆவாரே. 3

கற்ற கல்வி மறந்தாரும்
கற்றுத் தெளிதல் இயன்றிடுமே;
உற்ற ஒழுக்கம் மறந்தாரை
உலகு பழித்து ஒழித்திடுமே. 4

சிந்தை தன்னில் மாசுடையார்
செல்வம் புகழைத் தந்திடுமோ?
நிந்தை அன்றி ஒழுக்கமிலார்
நேரும் வாழ்வில் உயர்வுண்டோ? 5

வாழ்வில் இன்பம் ஒழுக்கநெறி
வளர்க்கும் என்ப தறிவார்கள்
தாழ்வைக் கொடுக்கும் ஒழுக்கமிலாத்
தன்மை தன்னைக் கொள்வாரோ? 6

உயர்வு அனைத்தும் தருவதெலாம்
ஒருவர் கொள்ளும் ஒழுக்கமதாம்;
அயர்வும் வாழ்வில் பெரும்பழியும்
அடைவார் அதனைத் துறந்தாரே. 7

நல்ல ஒழுக்கம் நல்வினைகள்
நாட்டிப் பெருமை தருவதுவாம்;
அல்ல வெல்லாம் துன்பமதை
ஆக்கித் தீர்க்கும் துறைகளன்றோ? 8

சொல்லால் இனிமை தருபவரே
சொல்லும் ஒழுக்க நெறியுடையார்;
பொல்லாச் சொல்லை அவர்வாயால்
புகலக் கேட்க வியலாதே. 9

மண்ணுள் வாழ்வார் தம்மோடு
மாண்பாய் ஒழுக அறியாதான்
எண்ணும் எழுத்தும் கற்றதனால்
எய்தும் பயனும் என்னேதான்? 10

## பிறனில் விழையாமை.

அறமும் பொருளும் நூல்வழியே
அறிந்தார் என்றும் பிறன்மனையாள்
புறம்போய் காதல் புரிந்தொழுகும்
புன்மைக் காமம் கொள்ளாரே. 1

அண்டை வாழ்வான் மனையாள்மேல்
ஆசை உற்று அவன்வாயில்
மண்டை சொறிந்து நிற்பாரின்
மடயர் உலகில் வேறுளரோ? 2

தம்மை நம்பி நட்புற்றான்
தலைவி மீது காமுற்றான்
செம்மை நெறியை உடையானோ?
செத்தான் ஒப்பான் அவனன்றோ? 3

பித்துக் கொண்டு பிறன்மனையாள்
பின்னே சென்று காமுறுவான்
எத்தனை பெருமை உடையோனாய்
இருந்தும் தீமை அடைவானே. 4

அயலான் மனையாள் தனையடைதல்
ஆகும் நெறியாய் நினைந்திடுவான்
அயராப் பழிக்கு ஆளாகி
அறத்தால் அழிக்கப் படுவானே. 5

இச்சை கொண்டு பிறன்மனையாள்
இன்பம் பருகத் துடிப்பவனே
அச்சம் தீமை பழியோடு
அடங்காப் பகையால் அழிபவனும். 6

பெருமை செய்யும் இல்லறத்தைப்
பேணும் நல்லான் அயலார்தம்
அருமைத் துணையாள் தன்மீது
ஆசைக் கணையைத் தொடுப்பானோ? 7

மற்றார் மனைவி தனைநினையா
மாண்பு மிக்க சான்றோர்க்கு
உற்ற துணையாய் அறத்தோடு
ஒழுக்கம் தானும் நின்றிடுமே. 8

நல்லார் உலகில் யாரென்று
நாடின் அயலார் நற்றுணையாம்
இல்லாள் நற்றோள் பற்றிடுமோர்
எண்ணம் இல்லார் ஆவாரே. 9

அறத்தைச் செய்யார் ஆனாலும்
அயலார் மனையைக் காமுற்று
மறத்தைச் செய்யார் ஆவாரேல்
மாண்பு பெறுவார் புவிமீது. 10

## பொறையுடைமை.

தன்னைத் தோண்டும் மக்களையும்
தாங்கும் புவியின் புகழுடையார்
மன்னித் தருளி மாற்றாரின்
மடமைச் சொல்லைப் பொறுப்பவராம். 1

பொறுத்தல் உலகிற் புகழீயும்;
புல்லர் செயலை அப்பொழுதே
மறத்தல் அதனின் மேலாகும்;
மனத்திற் கொள்ளல் தீதாகும். 2

வறுமை தன்னின் வறுமையது
வந்தார்க் கீயாப் பண்பேயாம்;
திறமை தன்னின் திறமையது
தீயார் செயலைப் பொறுப்பதுவாம். 3

பெருமை குன்று வாழ்வுதனைப்
பேண எண்ணும் மாந்தரெலாம்
அருமைப் பொருளாய் பொறுமைதனை
ஆக்கிக் காத்தல் வேண்டுவதாம். 4

தன்னை இகழ்வார் தமைக்கடிவார்
தக்கார் என்று எண்ணுமல்
பொன்னைக் காக்கும் காப்பேபோல்
போற்றும் உலகு பொறுத்தாரை. 5

இன்னல் செய்தார்க் கூறியற்றி
இன்பம் பெறுதல் அக்கணமே;
கன்னல் தமிழ்போல் புகழ்பெற்றுக்
களிப்பார் பொறுமை உடையாரே. 6

தீயர் செய்த தீவினையால்
தீராத் துன்பம் வந்துறினும்
தூய உள்ளம் உடையோர்கள்
துன்பம் எதிராய்ச் செய்யாரே. 7

செல்வம் வலிமை இவையுடையார்
செய்யும் தீங்கைப் பொறுமையினுல்
வெல்வர் அறிஞர் என்பதனுல்
வெம்மை வாழ்க்கை அவர்க்கில்லை. 8

துறவு கொண்டார் தன்னிலுமே
தூயர் என்ற பெருமைநிலை
பொறுமை என்னும் நகையாலே
பொல்லார் சொல்லை மறப்பவர்க்காம். 9

உண்ணு நோன்பை உடையாரே
உலகிற் பெருமை பெறுபவராம்;
புண்ணும் சொல்லைப் புகல்வாரைப்
பொறுப்பார் அவரின் மிக்காராம். 10

# அழுக்காறாமை.

நெஞ்சில் அழுக்கா றில்லாது
நேரும் நெறியே ஒழுக்கமதாம்;
விஞ்சும் பெருமை கொள்வோர்க்கு
வேண்டும் நெறியும் அதுவேயாம். 1

எல்லோ ரிடத்தும் அன்புடையான்
ஏதம் ஆகும் அழுக்காறு
இல்லா னயின் அவன்பெருமைக்(கு)
ஈடாய் வேறு யாதுண்டோ? 2

அழுக்கா றுற்று அயலாரின்
ஆக்கந் தன்னைக் கருதிடுவான்
விழுப்பந் தருநற் செல்வமதை
விரும்பின் வாழ்வு பெறுவானோ? 3

தூய்மை நெறியைத் துறந்தாரை
துன்பம் வந்து அணையுமெனும்
வாய்மை அறிவார் அழுக்காறு
வழியைக் கொண்டு வாழ்வாரோ? 4

மாற்றார் செய்ய மறந்தாலும்
மனத்தின் அழுக்கா றொருவர்க்கு
கூற்றாய் நின்று அழிவுதனைக்
கொடுக்கும் இதுவே உலகியல்பு. 5

அற்றார் பசியைத் தீர்ப்பான்மேல்
அழுக்கா றுறுவான் அப்பிணியால்
உற்றா ரோடு துன்புற்று
உடுக்கை இன்றி உழல்வானே. 6

மற்றார் செல்வம் தனைக்கண்டு
மனத்தே அழுக்கா றுறுவானை
பொற்றா மரையாள் நீங்கிடுவாள்
புகுந்து வாழ்வாள் மூதேவி 7

செம்மை நெறியைத் துறப்பதுவும்
செல்வந் தன்னை அழிப்பதுவும்
இம்மை மறுமை அனைத்துக்கும்
இன்னல் நல்கும் அழுக்காறே. 8

குற்றம் உடைய நெஞ்சத்தான்
கொண்ட செல்வம் நல்லோனை
உற்ற வறுமை போலாங்கே
ஒழிதல் திண்ணம் அக்கணமே 9

அழுக்கா றுற்றார் ஆக்கமுடன்
அழகாய் வாழ்ந்த கதையுண்டோ?
அழுக்கா றில்லா நல்லோர்கள்
அல்லல் பெற்ற துண்டோசொல். 10

## வெஃகாமை.

கொள்ளற் குரிய நடுவுநிலை
கொள்ளா தயலோர் பொருள்தன்னைக்
கொள்ள எண்ணும் தீநெறியோர்
குடியோ டழிவைப் பெறுவாரே. 1

நன்மை செய்து நன்னெறியில்
நாளும் வாழ்வைப் பெறுவோர்கள்
புன்மைச் செயலால் பிறர்பொருளைப்
போற்றிப் பெறவும் எண்ணுவரோ? 2

நிலையில் லாத இன்பமதை
நினைந்து அயலார் பொருள்மீது
அலையும் உள்ளம் கொள்வாரோ
ஆன்ற இன்பம் எண்ணிடுவார். 3

அறிவின் திறனால் புலனைந்தும்
அடக்கி யாளும் சான்றோர்கள்
வறுமை நீங்கப் பிறர்பொருளை
வலிந்து கவர எண்ணுவரோ? 4

பித்தன் போல பிறர்பொருளைப்
பெறுதற் கெண்ணும் பேதையவன்
எத்தனை நூற்கள் கற்றவனாய்
இருந்தால் என்னே புகழுண்டோ? 5

அருளை நாடி நல்லறங்கள்
ஆற்ற நினைப்பான் பிறர்செல்வப்
பொருளைக் கவர தீநெறியைப்
புரிய எண்ணின் அழிவானே. 6

அயலார் செல்வம் மீதாசை
அடைந்து தீமை புரியாதீர்;
இயலா தென்றும் அப்பொருளால்
இன்பம் எய்தல் ஈதறிவீர் 7

ஆக்கம் என்றும் குன்ருது
அன்பு சற்றும் நீங்காது
காக்கும் நல்லோர் பிறர்பொருளைக்
கவரும் எண்ணம் கொள்வாரோ? 8

நீதி யறிந்து பிறர்பொருளை
நினையா தவனே நல்லோனும்;
காதல் கொண்டு சீதேவி
கண்ணுய் அவனை அடைவாளே. 9

வறுமை நீங்கிப் பிறர்பொருளால்
வாழ நினைப்பான் அந்நினைவால்
இறுதி அடைவான்; அவ்வெண்ணம்
இல்லான் வாழ்வு பெருகிடுமே. 10

## புறங்கூறுமை.

அறத்தின் பெருமை அறியாது
அல்லல் புரியும் தீயோனும்
புறத்தில் இழித்து உரைக்கும் ஓர்
புல்லன் முன்னே நல்லோனும். 1

ஒருவர் கண்ட போதுவந்து
உரைத்துப் புறத்தே இழித்துரைத்தல்
தருமம் நீங்கித் தீதியற்றும்
தன்மை தன்னின் தீதன்ருே? 2

காணு விடத்தே கடிந்துரைத்தும்
கண்ட போது கனிந்துரைத்தும்
வீணுய் வாழ்க்கை புரிவதினும்
விரைந்து சாதல் நன்ருகும். 3

முன்னே நிற்பார் தம்குறையை
மொழிதல் தவருய் ஆகாதே;
பின்னே நின்று இழிந்தவுரை
பிதற்றும் செயலே தீதாகும். 4

அறத்தின் மேன்மை இல்லாதான்
அகத்தின் இயல்பை, அயலாரைப
புறத்தே நின்று அவன்கூறும்
புன்மைச் சொற்கள் காட்டிடுமே. 5

பிறரைப் பழித்துப் பெரும்பிழைகள்
பேசும் ஒருவன் தன்வாழ்வின்
திறனை உன்னித் தன்குற்றம்
தேர்ந்தா னாயின் சொல்வானோ? 6

இகழ்ந்து கூறும் செயலாலே
இயைந்த நட்பை நீக்கிடுவான்
மகிழ்ந்து மற்றார் தம்மோடு
மாண்பாய் வாழ்தல் இயலுவதோ? 7

உற்றார் தமையே புறங்கூறி
உலவும் ஒருவன் தன்செயலால்
மற்றா ராயின் என்செய்வான்?
மனத்தால் எண்ண வியலாதே! 8

அயலார் இல்லாப் பொழுதெண்ணி
அவரைப் பழிப்பான் உடற்பாரம்
வியனீர் உலகு பொறுமையினால்
வெறுப்புற் றோய்ந்து தாங்கிடுமே. 9

ஊரார் கேட்டைச் சொல்கின்றாய்
உன்னை எண்ணிப் பாரப்பா!
சீராம் வாழ்வைப் பெறவேநற்
சிந்தை வேண்டும் உணரப்பா! 10

## பயனில சொல்லாமை.

அறிஞர் தம்மை வெறுப்புறவே
ஆக்கும் பயனில் லாதவையாம்
வறிய சொல்லைச் சொல்வாரை
வையம் என்றும் வைதிடுமே. 1

கற்றார் முன்னே கருத்தில்லாக்
கயமைச் சொல்லை உரைப்பவரே
செற்றார் முன்னர் தீச்செயலைச்
செய்வார் தன்னின் தீயவராம். 2

சொல்லத் தக்க தல்லாத
சொல்லைச் சொல்வார் அச்சொல்லால்
நல்லார் அல்லார் ஆவாரே;
நாடும் புகழும் அவர்க்குண்டோ? 3

சொல்வ தெல்லாம் பயனில்லாச்
சொல்லே உடையான் தனைவிட்டு
செல்வம் நீங்கிச் சென்றிடுமே;
செம்மை வாழ்வும் சேராதே. 4

செயலில் பெரியர் ஆனாலும்
செம்மை நெறியர் ஆனாலும்
பயனில் லாத சொல்வாரேல்
பழியே பெறுவார்; புகழில்லை. 5

தக்க நல்லாச் சொல்லாலே
 தரணி மீது வாழ்வோர்கள்
மக்கள் உருவைப் பெற்றாலும்
 மக்கள் அல்லர்; பதராவார். 6

நயமே பயவாச் சொல்லெனினும்
 நன்றாம்; சான்றோர் எந்நாளும்
பயனே இல்லாச் சொல்லதனைப்
 பகரா திருந்தால் மாண்புறுவார். 7

அறிவால் பயனை அடையநிதம்
 ஆயும் சான்றோர் யாரேனும்
வறிதே சொற்கள் வழங்குவரோ?
 வாய்மை தன்னின் நீங்குவரோ? 8

நிலையாம் அறிவைப் பெற்றவராய்
 நீண்ட புகழை அடைவோர்கள்
விலையில் லாத சொல்லதனை
 விளையாட் டெனினும் விதையாரே. 9

உரைமின் உரைமின் உள்ளத்தே
 உணர்வைத் தூண்டும் நற்சொற்கள்;
உரையா தொழிமின் தீச்சொற்கள்
 உலகோர் அச்சொல் வேண்டாரே. 10

## தீவினையச்சம்.

தீய செயலைச் செய்தோர்கள்
 தீங்கை எண்ணி வருந்தாரே;
தூய உள்ளம் உடையோர்கள்
 துன்பஞ் செய்ய அஞ்சிடுவார். 1

பாவச் செயலைப் புரிவதனால்
 பதிலாய் பாவம் வந்தடையும்;
மேவல் வேண்டாம்; நெருப்பன்ன
 மிக்க வெம்மை விளைத்திடுமால் 2

வெறிய செயலை பகைவர்க்கும்
 விதையா தொழிவான் தன்னறிவே
அறியக் கூறின் தலையறிவாம்;
 அறிவின் கூறு இதுவேயாம். 3

உள்ளம் அயர்ந்த நேரத்தும்
 ஊறு மற்றோர்க் கெண்ணாதீர்;
எள்ளற் குரிய அச்செயலின்
 ஏதம் உம்மை வந்தடையும். 4

பொருளால் வறியன் என்றெண்ணி
 பொல்லாச் செயலைச் செய்வான் இல்
இருளால் மூடி இன்மையினால்
 இழிந்த நிலையைச் சென்றடையும். 5

குறைவில் லாத வாழ்வதனைக்
கொள்ளக் கருதும் ஒருவன்தன்
நிறையில் நின்று பிறர்க்கின்னல்
நினையா திருத்தல் வேண்டுவதாம். 6

ஆய பகைகள் அனைத்தையுமே
அழித்து வென்றி கொள்வோனும்
தீய வினையால் என்றென்றும்
தேய்ந்து மாய்ந்து அழிவானே. 7

மாயா தெங்கும் தொடர்ந்துவரும்
மாய நிழலைப் போற்பெருகி
தீயார் செய்த தீமையது
தீரா தவரைச் சிதைத்திடுமே. 8

தன்னைப் பேணி இன்புற்று
தரணி மீது வாழ்வோர்கள்
இன்னல் அளிக்கும் தீவினைகள்
ஏதும் பிறர்க்கு இயற்றுரே. 9

தேடும் பொருளால் வலிமையினல்
தீய வினைகள் புரியாதான்
கேடு வந்து சூழாத
கேண்மை அடைந்து வாழ்பவனும். 10

## ஒப்புரவறிதல்.

கடமை ஆற்றக் கைம்மாறு
கருதல் வேண்டாம்; கார்மேகம்
இடையீ டின்றிப் பொழிதற்கு
இம்மண் செய்யும் துணையென்னே? 1

முயன்று பெற்ற பொருளெல்லாம்
முறையாய் வாழ்ந்து அயலார்க்கு
இயன்ற நெறியில் துணைநின்று
இன்பம் உலகிற் பெறுதற்கே. 2

நல்ல செயலாய் உலகத்தும்
நாடும் இமையோர் நாட்டகத்தும்
இல்லை ஒப்புர வின்மிக்க
இன்பந் தருநற் செயலில்லை. 3

உலகோர் வாழ்வைக் கண்ணுற்று
ஒத்து வாழ அறியாதான்
உலவும் உருவைப் பெற்றாலும்
உயிரில் லாதான்; செத்தானே. 4

ஊரார் எல்லாம் உண்ணற்கு
உதவுங் குளத்து நிறைநீர்போல்
சீராய் அறிவைப் பெற்றவனின்
செல்வம் உலகோர்க் குதவிடுமே. 5

ஒப்புர வறிவான் தன்னிடத்தே
ஒன்றும் செல்வம் ஊர்நடுவே
செப்புதற் கரிய இன்கனிகள்
செழித்த மரம்போல் பயன் தருமே. 6

உறுப்பு யாவும் மருந்தாக
உதவும் மரத்தைப் போலாங்கே
சிறப்பு மலிந்த நல்லோரின்
செல்வம் உலகிற் குதவுவதாம். 7

பொருளால் தாழ்வு வந்துறினும்
புகழைத் தருநல் ஒப்புரவு
கருதா வாழ்வைக் கொள்வாரோ
கடமை ஆற்ற அறிந்தார்கள். 8

திருந்தச் செய்யும் ஒப்புரவு
திறமாய்ச் செய்ய வியலாது
வருந்தும் நிலையே நல்லோர்க்கு
வறுமை உற்ற நிலையாகும். 9

நல்லோர் ஆற்றும் ஒப்புரவால்
நண்ணும் கேடும் கேடாமோ?
எல்லா உலகும் புகழ்பாடும்
இன்ப நிலையும் அதுவன்றோ? 10

## ஈகை.

வறுமை மிகையால் வந்தோர்க்கு
வழங்கும் பண்பே ஈகையதாம்;
மறுமைப் பயனை அதுதருமாம்;
மற்ற யாவும் பயனிலவாம். 1

பெருமை பெறலாம் என்றாலும்
பிறர்தம் பொருளை நாடாதீர்!
திருவார் வீடு சிதைந்தாலும்
தேரும் ஈகை மறவாதீர்! 2

தன்னை அடைவான் தன்வறுமை
தணிய மீண்டும் பிறன்வாயில்
உன்னிச் செல்லா நிலையறிந்து
உதவும் நல்லோன் உயர்குடியோன். 3

இரந்து பெற்ற பொருளாலே
இன்னல் நீங்கி இன்பமுறும்
இரந்தார் வதனங் காண்பதுவே
ஈதற் குரிய பண்பாகும். 4

மண்ணில் வாழ்வார் தம்பசியை
மாற்றும் பண்பால் ஈவோர்கள்
உண்ணும் உணவைத் துறந்தாற்றும்
உயர்ந்தோர் தம்மின் உரவோரே. 5

பொருளில் லாதார் பசியாலே
புரளும் நிலையைப் போக்குவதே
அருளாம்; அறமாம்; ஒருவன்தன்
ஆக்கம் பெருமை தருமிடமாம். 6

பல்லோர் சூழ எந்நாளும்
பகுத்தே உண்ணும் பண்பாளன்
இல்லா னாகிப் பசியாலே
இன்னல் அடையான்; ஈதுண்மை. 7

வறியார்க் கீந்து அவரின்ப
வதனந் தருமோர் பெருமையினை
அறியா தவரே செல்வமதை
அடக்கிக் காத்து இழப்பவராம். 8

இரந்து வாழும் நிலையினையே
இழிந்த நிலையாய்ச் சொல்வார்கள்;
பரந்த உலகிற் பகுத்துண்ணும்
பண்பில் லாதார் மிகவிழிந்தார். 9

சாவின் மிக்க துன்பநிலை
சகத்துள் ளோர்க்கு வேறுண்டோ?
மேவின் அதனின் மிக்கதுவாம்
மிடியுற் றோர்க்கு ஈயாமை. 10

# புகழ்

இல்லை என்று வருவோர்க்கு
ஈந்து புகழைப் பெறுவீரே!
நல்ல செயலாய் அதுவன்றி
நாடும் நன்மை வேறுண்டோ? 1

புலமை மிக்கார் சொல்லாலே
புகழைப் பெறுதல் இவ்வுலகில்
உலவும் வறியார்க் கீவார்தம்
ஒப்பில் லாத வாழ்வாகும். 2

உலகில் வாழ்க்கை நிலையாதாம்;
உண்மைப் புகழே நிலைப்பதுவாம்;
நிலையாய் நிற்கும் அப்புகழை
நினைந்து அறங்கள் புரிவீரே. 3

நீண்ட புகழைப் புவிமீது
நிலைக்கச் செய்தார் விண்ணுலகில்
மாண்ட புகழைப் பெறுவாரே
மறையோர் புகழின் மிகைபடவே. 4

வறுமை வரினும் சாவேதான்
வரினும் அஞ்சார் அறிவுடையார்;
திறமை யுடனே வினைகளெலாம்
தெளிந்து செய்து புகழுடைவார். 5

உலகிற் பிறந்தார் நற்செயலால்
உரிய புகழைப் பெறவேண்டும்;
இலையேல் மக்கட் பிறப்பதனை
எய்தப் பெற்றும் பயனுண்டோ? 6

புகழ்சேர் வாழ்வைப் புரியாதான்
போற்றற் குரிய ஒழுக்கமிலான்
இகழ்வார் தன்மேல் வருந்துவதும்
எண்ணின் நகையைத் தருவதுவாம். 7

புகழைப் பெறுதற் கேற்றவினை
புரியா துலகில் வாழ்பவரே
இகழப் பெறுவார்; இத்தகையோர்
இன்ப வாழ்வை எய்தாரே. 8

நல்லார் வாழும் பதியதனில்
நாடும் விளைவைப் பெற்றிடலாம்;
அல்லார் வாழும் பதியாயின்
அரிதே அரிதே விளைவம்மா! 9

பழியே இல்லா நல்வாழ்வே
பாரிற் புகழைத் தரும்வாழ்வு;
இழிவே பெற்று இன்னலுடன்
இயற்றும் வாழ்வும் வாழ்வாமோ? 10

**(கவிதை மணிமாலை—திருக்குறள் விளக்கம்
முதற்பாகம் முற்றும்.)**

# வீரத்தாய்.

## (புறப்பாடல் விளக்கக் கவிதை)

பண்டொரு அமரில் வீரப்
    பைந்தமிழ் சிறுவன் சென்றான்
கண்டவர் கருணை கொள்ளும்
    காட்சியே யாகும் அம்மா!
திண்டிறல் தோளன் ஆகித்
    தீரமாய் வாளும் ஏந்தி
பண்டையோர் புகழை நாட்டப்
    படைக்கலம் பெற்றான் அம்மா! 1

சென்றவன் வழியை நோக்கிச்
    சேவித்தே இருந்தாள் அன்னை;
அன்றிரா ஆன போதும்
    அவன்வரக் காணா ளாகி
வெற்றியைப் பெற்றோர் போல
    வீதியிற் செல்வார் தம்மை
சென்றவள் வினவி நின்றாள்
    செங்கயற் கண்ணள் அம்மா! 2

என்மகன் தன்னை நீவிர்
    ஏந்திய ஈட்டி யோடு
நன்சமர் புரிய ஆங்கே
    நாட்டத்தி லுற்ற துண்டோ?
என்மனை வந்தா னில்லை
    ஏதுதான் விளைந்த தையா?
நன்மொழி கேட்க உம்மை
    நாடினேன் கூறும்' என்றாள். 3

'அன்னையுன் மகனு மாங்கே
அமரினுக் கஞ்சி யோடி
தன்னையே காத்துக் கொள்ளத்
தயங்கிலு னில்லை யம்மா!
பின்னர்யாம் கண்ட போது
பின்புறம் அம்பு கொண்டான்;
அந்நிலை யெல்லாம் ஈண்டு
அறைதலும் வெட்கம்' என்றார். 4

'என்னை? என் மகனே போரில்
எதிர்படைக் கஞ்சி மாண்டான்
முன்னைஇப் போரில் மாண்ட
முந்தையர் வீரம் எல்லாம்
உன்னிடாக் கோழை யாகி
உலுத்தனய் மாண்டா னகில்
என்னை? என் குலத்தின் வீரம்
இல்லாது சென்ற தெங்கே?' 5

மறக்குடி மைந்தன் என்னும்
மாபுகழ் எண்ணம் இன்றிப்
புறத்தினிற் புண்ணைத் தாங்கி
போரினில் மாண்டா னகில்
திறத்துடன் வாழ்க வென்று
தேனுறு ஈந்த கொங்கை
அறுத்தவண் எறித லோடு
ஆவியைத் துறப்பேன் நானே' 6

'பிறந்தவர் இறப்பர் என்று
பேரறி வாளர் சொல்வர்
இறந்தவர் இம்மண் மீது
ஈடுவர் புகழென் வீரம்;
மறந்தனன் ஆக மைந்தன்
மாண்பினை இழந்தா னாகில்
மறந்திடேன் சொன்ன சொற்கள்
மண்ணிடை நாட்டு வேனே. 7

என்றுரை செய்து மங்கை
ஏறுபோல் வாளும் ஏந்திச்
சென்றனள் களத்தை நோக்கி;
செங்கயற் கண்ணள் ஆங்கு
நன்றுயிர் நீங்கி வீரர்
நாற்புறம் கிடக்கக் கண்டு
கன்றினைத் தேடித் தேடிக்
களமெலாம் நடந்தா ளம்மா! 8

தலைவிரி கோல மங்கை
தாங்கிய வாளி னாலே
சிலையெனக் கிடந்த வீரர்
திரளினுள் மகனைக் கண்டாள்;
தலைமுறை வீர மெல்லாம்
தனையனும் காத்து நெஞ்சில்
நிலைபெறும் அம்பி னோடு
நிம்மதி பெற்றான் அந்தோ! 9

'ஆருயிர் மைந்தா நீயே
ஆண்மையின் சிகரம் செல்வா!
சீருயர் வீரா! உன்னைச்
சினந்தவள் அறியேன் ஏழை;
பேருயர் உலகைப் பெற்றாய்
பெரும்புகழ் பெற்றேன்' என்றாள்
சீருடன் ஈன்ற போழ்தின்
சிறந்ததோர் உவகை பெற்றே. 10



## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 6 | 6 | உற்றயெம் | உற்றவெம் |
| 15 | 10 | தனைப்பேணி | தமைப்பேணி |
| 19 | 3 | தன்னிற் | தம்மிற் |
| 31 | 20 | புகளென்னே | புகழென்னே |
| 42 | 18 | நீனைப்பான் | நினைப்பான் |
| 45 | 8 | தன்னின் | தம்மின் |
| 54 | 7 | தன்மேல் | தம்மேல் |
| 39 | 15 | அழுக்காறு | அழுக்காற்று |